2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 26—6—75 வியாழன் மலர் 123

### நாடாளுமன்றத்தில்

## ஓட்டுபோட இந்திராவுக்கு தடை

புதுடெல்லி, ஜூன் 24—

இந்திராகாந்தி தேர்தல் வழக்கில் 'ஸ்டே' மனு விசாரித்த சுப்ரீம் கோர்ட் நீதிபதி வி ஆர் கிருஷ்ணய்யர் இன்று தீர்ப்புக் கூறினார்.

இந்திராபிரதமராக நாடாளுமன்ற நடவடிக்கையில் பங்கு கொள்ளலாம். ஆனால் ஓட்டு போடக்கூடாது என்ற நிபந்தனையுடன் முடிவை அறிவித்தார். அலகாபாத் உயர்நீதி மன்ற தீர்ப்பின்மேல் தொடுக்கப்பட்டுள்ள அப்பீல் ஜூலை 14ந் தேதி விசாரணைக்கு வரும்.

## பஸ் தொழிலாளர் மறியல் தொடர்கிறது

நாகர்கோவில், ஜூன், 24—

சருங்காலிகள் ஓட்டிவரும் பஸ்களை, நேற்று (திங்கள்) மீனாட்சிபுரம் பஸ் டிப்போமுன் 4 பஸ் தொழிலாளர்கள் தடுத்து மறியல் செய்துகைதாயினர்.

ஸ்தாபன காங்கிரஸ் சார்பில் இரு அணிகள் பஸ் மறியலில் ஈடுபட்டு கைதாயினர்.

முதல் அணியில் 10 பேரும் 2-வது அணியில் 7பேரும் கலந்துகொண்டனர்.

மதுரையில் காலை, அரசுப்போக்குவரத்து பணிமனையிலிருந்து வெளியேஎடுக்கப்பட்ட பஸ்முன்பு 3 பேர் மறியல்செய்துகைதாயினர் இம்மூவரும் பிட்டர்களாகப் பணிபுரிபவர்கள்.

## இந்திய-வியட்னும் நட்புறவு வாழ்த்தொலிகள் எண்டிசையும் அதிர்ந்தன

## தோழர்கள் சுந்தரய்யா, ஜோதிபாசு, ரணதிவே முன்னின்று வரவேற்றனர்

# தென் வியட்னும் தலைவருக்கு வீர வரவேற்பு

# கல்கத்தாவில் தோழர் வோ ஹை ஹியன் பேச்சு

கல்கத்தா, ஜூன் 25—

தென்வியட்னும் புரட்சி அரசின் தூதுவராக அதிகாரி தோழர் வோ ஹை ஹியனும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் ஜோதிபாசுவும் கைலாகு கொடுத்து—அதே கைகளை இணைந்தவாறே உயரே தூக்கி ஆட்டியபோது—ஒளிவீசும் அந்த கம்பீரமான மேடையில் நின்ற அவ்விருவரையும் ஒருசேரக் கண்ட மனித சமுத்திரம் மெய்சிலிர்த்து, 'இந்திய-வியட்னும் நட்புறவு வாழ்க!' என்று காது செவிடுபட இடியோசை எழுப்பி கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

இந்திய-வியட்னும் ஒருமைப்பாட்டுக் கழகத்தின் சார்பாக அழைக்கப்பட்டிருந்த புரட்சி அரசின் பிரதிநிதி வோ ஹை ஹியன் அவர்களுக்கு தான் கல்கத்தா நகரம் இவ்வளவு மகத்தான வரவேற்பு அளித்தது.

வியட்நாம் மீது ஏகாதிபத்யவாதிகள் குண்டு பொழிந்தபோது அந்தக் காட்டுமிராண்டித்தனத்தை எதிர்த்துஇதே கல்கத்தா நகர வீதிகளிலேதான் மாணவர்களும், வாலிபர்களும் ஆர்ப்பாட்டம் செய்து இரத்தம் சிந்தினர்கள்.

புரட்சிப் பரமபரையின் சிறப்பு மிகுந்த அந்த கல்கத்தா நகரம், உலகமே வியக்கும்வண்ணம் ஏகாதிபத்ய வல்லரசுகளை முறியடித்து வெற்றிக்கொடி நாட்டிய வியட்நாம் மக்களின் பிரதிநிதியை பூரிப்புடன் வரவேற்பதில் மட்டிலா மகிழ்ச்சியையும் பெருமையையும் அடைந்தது.

### ஹோ-சி-மின் திருவுருவம்

செங்கிறத் துணியால் அழகுற அமைக்கப்பட்ட கம்பீர மேடையின் முகப்பில் மாவீரர் ஹோ-சி-மின் திருவுருவம் காட்சியளித்து அனைவருக்கும் உற்சாக மூட்டிக்கொண்டிருந்தது

கம்பீரமான அந்த மேடையின் இருபுறங்களிலும் வடவியட்னும் ஜனநாயக குடியரசின் கொடிகளும். தென்வியட்னும் தேசிய விடுதலை முன்னணியின் கொடிகளும் மாலைநேர இன்பக்காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்தன.

கல்கத்தாவின் பெருந்திடலானசாகித்மினர் மைதானத்தில், 13—6—75.ல் புரட்சி அரசின் பிரதிநிதியை வரவேற்க மனிதக் கடல் அலைமோதிக்கொண்டிருந்தது. மாணவர்களும் வாலிபர்களும் பத்தாயிரக்கணக்கில் மொய்த்துக கொண்டு விடுதலையடைந்த தென்வியட்னும் மக்களின் அருமைத் தலைவரை வாழ்த்துக்கள் கூறி வரவேற்று பெருமை பெற்றனர்கள்

அரைப் பாசிஸ்ட் அடக்குமுறைத் தாண்டவமாடும் பகுதிகளில் கூட, அலங்கார வளைவுகள் அமைத்தும், செங்கொடி தோரணங்கள் கட்டியும் விழாக்கோலம் பூண்டிருந்தது.

தோழர் வோ அவர்கள் டம்டம் விமான நிலையத்தில் இறங்கியதிலிருந்து—சாகித்மினர் பொதுக்கூட்ட மேடையை விட்டு அகலும் வரையிலும், கல்கத்தா மக்களின் மகிழ்ச்சி மிகுந்த ஆரவாரத்துக்கு அளவே இல்லை.

### தலைவர்கள் வரவேற்பு

விமான நிலையத்தில் மார்க்சிஸ்ட் தலைவர்கள் பி சுந்தரய்யா, புரமோதாஸ்குப்தா ஜோதிபாசு மற்றும் பொதுஜனஸ்தாபனங்களின் முக்கிய தலைவர்களும், பத்தாயிரக் கணக்கான மக்களும் திரண்டு நின்று தோழர் வோ அவர்களை வரவேற்றனர்கள். அவரை காரில் ஏற்றி, கல்கத்தா நகருக்கு வரும் வரையிலும் வீதிகளின் இருமருங்கிலும் ஆயிரக் கணக்கான மக்கள் கூடிநின்று வாழ்த்தொலி எழுப்பினர்கள் 12 இடங்களில் நிறுத்தி மாலைகள் அணிவித்து செவ்வணக்கம் செய்தனர்.

தோழர் வோ அவர்கள் பொதுக்கூட்ட மேடையில் ஏறியவுடன், வாழ்த்தொலிகள் வானைப்பிளக்க, கைதட்டல் ஓசை இடியென முழக்க. ஜன அலை மேடையை நோக்கி நகர்ந்தது எப்படியாவது, புரட்சி அரசின் தலைவரை அருகிலிருந்துபார்த்து விடவேண்டுமென்ற ஆசையுடன் நகர்ந்தது.

இந்திய—வியட்னும் ஒருமைப்பாட்டுக் கமிட்டி சார்பில் தோழர் ஜோதிபாசுவும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி சார்பில் தோழர் பி, டி. ரணதிவேயும் தோழர் வோ அவர்கட்கு மாலைகள் அணிவித்து வரவேற்றனர் மற்றும் ஆர். எஸ். பி. ஆர், சி. பி ஐ சி ஐ டி யூ.. கிசான்சபா. வாலிபர் சம்மேளனம் இந்திய மாணவர் சங்கம். மாதர் சங்கம். கலைக்குழுக்கள் சார்பிலும், நூற்றுக்கணக்கான கிளைகள் ஆயிரத்துக்கு மேற்பட்ட சிறுவர் சிறுமிகள்... அத்தனை பேர்களும் மாலை போட வேண்டுமென்று பிடிவாதம் பிடிக்க—இந்த மாலை அணிவிப்பு நிகழ்ச்சி முடிய ஒரு மணி நேரம் ஆயிற்று.

பிறகு ஜோதிபாசு, வியட்னும் யுத்தத்தின் பாடங்களைப் பற்றி சிறிது நேரம் பேசினர்.

### தோழர் வோ பேச்சு

பேசுவதற்கு தோழர் வோ எழுந்தபோது, மீண்டும் ஜனசமுத்திரம் கைதட்டி வானதிர வாழ்த்தொலி எழுப்பியது

தோழர் வோ பேசுகையில், புரட்சி அரசின் 6வது ஆண்டு விழாவையும் வியட்னும் வெற்றியையும் கொண்டாட மகத்தான ஏற்பாடுகளைச் செய்துள்ள மேற்கு வங்க மக்களுக்கு நன்றி தெரிவித்தார்.

மேலும் அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"எங்கள் நாட்டின் பூரண சுதந்திரத்துக்காக 100 ஆண்டுகளுக்கு மேல் நாங்கள்போராடியிருக்கிறோம். அந்தப்போராட்டம் வெற்றி பெற்று விட்டது. நிலப்பிரபுத்துவ சக்திகளும் ஏகாதிபத்திய சக்திகளும் பிரித்து வைக்கப்பட்டிருந்த நிலைக்கு முடிவு கட்டி விட்டோம். ஒரு சமாதானமான, சுதந்திரமான, ஐக்கியமான, ஜனநாயகமான. உழைக்கும் மக்களே தங்களது தலைவிதியின் நாயகனாக விளங்கக்கூடிய ஒரு வியட்நாமை உருவாக்க வேண்டுமென்று விரும்பினோம் அது கைகூடி விட்டது வியட்நாம் நாட்டின் 4000 ஆண்டு வரலாற்றில் ஓர் புதிய சகாப்தம் துவங்கி விட்டது.

### ஏகாதிபத்திய கனவு தவிடுபொடி

தென்வியட்நாம் வெற்றியுடன் கூடவே, லேவோஸ் வெற்றியும், கம்போடியா வெற்றியும், ஏகாதிபத்திய வாதிகளின் உலகாதிக்க கனவைத் தவிடுபொடியாக்கி விட்டது. இது கடந்த 30 ஆண்டுகளில் ஜெர்மானிய. இத்தாலிய, ஜப்பானிய பாசிஸ்டுகள் முறியடிக்கப்பட்ட பிறகு அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு கிடைத்த மிகப்பெரிய இராணுவத் தோல்வியும், அரசியல் தோல்வியுமாகும்.

உலகப் போலீஸ்காரன் என்ற முறையில் வியட்நாம் மீது அமெரிக்கா போர் தொடுத்தது.

வியட்னுமில் அமெரிக்கா தோற்றதின் விளைவாக அமெரிக்காவில் நெருக்கடி ஏற்பட்டது உலகப் போலீஸ்காரனாக இனி ஒருகாலும் அமெரிக்கா விளங்க முடியாது, அவ்வளவு தூரம் போவானேன்? உள்நாட்டுப் போலீஸ்காரனுகக் கூட விளங்கமுடியாது.

### உலகப் புரட்சிக்கு உகந்த காலம்

உலகத்தில் ஆழமான மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஏகாதிபத்தியவாதிகள் இனி மீளமுடியாது இன்றைய சர்வதேச நிலை நன்றாக இருக்கிறது, இதுபோல் வேறு எந்தக்காலத்திலுமே இருந்தது இல்லை. 3 விதமான பலத்த புயல்களும் இன்று ஒரே சமயத்தில் ஓங்கியடிக்கின்றன. அது போல், ஏகாதிபத்தியத்திற்கு ஏற்பட்டுள்ள இன்றைய நெருக்கடிபோல். இதற்குமுன் ஏற்பட்டதே இல்லை. முரண்பாடுகள், சீரழிவுகள் பெரிய அளவில் ஏற்பட்டுள்ளன. உலகப்புரட்சிக்கு சாதகமான சூழ்நிலைமைகள் உருவாக்கப்பட்டுள்ளன"—என்று கூறினர்:

### மிகப்பெரிய சுமை

"அமெரிக்காவையும் அதன் கையாட்களையும் முறியடித்த பிறகு இன்றைய தென்வியட்னும் நிலைமை என்ன?

நிலைமை படுபயங்கரமாக உள்ளது கடந்த 30 ஆண்டு யுத்தத்தில் நாடு சின்னபின்னமாகிக் கிடக்கிறது. 30 லட்சம் பேர் வேலையில்லாமல் இருக்கிறார்கள் அதில் முன்னைய ஆட்சியின்கீழ் வேலை பார்த்த 5 லட்சம் சிப்பாய்களும் உள்ளனர். அவர்கள் காயமுற்றும் ஊனமுற்றும் கிடக்கிறார்கள். சுமை இதுமட்டுமல்ல.

ஒன்றரை லட்சம் பேர் கஞ்சா, அபின், மாத்திரைகள் உண்ணும் பழக்கமுடையவர்களாக உள்ளனர். அவர்களில் ஒரு லட்சம் பேர் சிறுவர்கள். மீதமுள்ளோர் வாலிபர்களும் பெரியவர்களுமாவர்.

எத்தனையோ கெட்ட பழக்க வழக்கங்கள் உள்ளவர்களும் பழைய அரசின் கூலிப்படைகளும் புரட்சி அரசுக்கு பெரும் சுமையாகவே உள்ளன.

### பெரும் நட்டம்

சுமைமட்டுமல்ல நட்டமும் அதிகம். அகதிகளை மனிதாபிமானத்துடன் வெளியேற்றுவதாககூறி, பல்லாயிரக்கணக்கான குழந்தைகளையும் பெண்களையும் விஞ்ஞானிகளையும் தொழில நிபுணர்களையும் கொண்டுபோய்விட்டார்கள்.

அமெரிக்க கைக்கூலிகள் வியட்னுமைவிட்டுவெளியேறும்போது, ஏராளமான சொத்துக்களையுமஎடுத்துக கொண்டு போய் விட்டார்கள்.

ஆயினும், புரட்சி அரசு யுத்த பிற்கால ஆக்கவேலைகளில் தீவிரமாக இறங்கி புதியவாழ்வை உருவாக்கிக்கொண்டிருக்கிறது, பந்தோபஸ்தையும் ஒழுங்கையும் சீக்கிரமே நிலைநாட்டிவிட்டோம். சகஜநிலை திரும்பிவிட்டது, பழைய சமூகத்தின் தீமைகளை அகற்றிவருகிறோம் என்றார்.

### உலக மக்களின் ஆதரவு எங்களுக்கு இனியும் தேவை

மேலும் அவர் பேசுகையில், 'பாரிஸ் உடன்பாட்டின் முக்கிய ஷரத்துகளின்படி நடக்குமாறு அமெரிக்காவை நிர்ப்பந்திக்க சகோதர நாடுகளின் உதவியும். உலக முழுவதுமுள்ள நண்பர்களின் உதவியும் இனியும் எங்களுக்கு தேவை.

பொய் கூறி அன்னிய நாடுகளுக்கு ஏற்றிச் செல்லப்பட்ட அகதிகள் அனைவரையும் மீண்டும் எங்கள் நாட்டுக்கே அனுப்பி வைக்க வேண்டும். அமெரிக்கர்களும். அவர்களது கைக்கூலிகளும் நாட்டை விட்டு ஓடுகின்றபோது. மக்களின் சொத்துக்களையெல்லாம் அபகரித்து சென்றார்கள். அவற்றையெல்லாம் எங்களிடம் ஒப்படைக்க வேண்டும்.

### புரட்சி லட்சிய வெற்றி இருவருக்கும் பொதுவாகும்

'பிரெஞ்சு ஏகாதிபத்தியமும், அமெரிக்க ஏகாதிபத்தியமும் எங்களைத் தாக்கி வந்தபோது அதைக் கண்டித்து ஆர்ப்பாட்டம் செய்து இரத்தம் சிந்திய கல்கத்தா மக்களை நாங்கள் மறக்கவே முடியாது. நம்மிரு நாடுகளின் பரம்பரை உறவை இடைக்காலத்தில் ஏகாதிபத்தியங்கள் தடுத்துவைத்தன. இனி உறவு பலப்படும்.

எங்களுடைய வெற்றி உங்களது வெற்றி, புரட்சி லட்சியத்தின்பொதுவான வெற்றியைக் கொண்டாடுவதில் பூரிப்படைகிறோம். உறவைப் பலப்படுத்த எங்களால் ஆன அனைத்தையும் செய்வோம்" என்றார்.

### இணைப்பும் இடைக்காலமும்

பகல் ஓய்வு நேரத்தின் போது, பத்திரிகை நிருபர்களுக்கு பேட்டியளிக்கையில் வோ கூறியதாவது:

"வடவியட்னுமும் தென் வியட்னுமும் இணைய வேண்டும் என்பதுதான எங்கள் இதய ஆசை. ஆனால் இது உடனடியாக முடியாது.

காரணம், வடவியட்னும் ஜனநாயகக் குடியரசு எனது, சோசலிஸ்ட முகாமைச் சேர்ந்தது. ஆனல், தென் வியட்நாம் புரட்சி அரசோ, கூட்டுச் சேரா நாடுகளைச் சேர்ந்தது. இதனல். இணைப்புக்கு சிறிது இடைக்காலம் பிடிக்கும்.

இதற்கிடையில், தங்குதடையின்றி வடக்கிலிருந்து தெற்கே செல்லவோ, தெற்கிலிருந்து வடக்கே செல்லவோ அனுமதிக்கப்பட்டுளளது செய்திப் போக்குவரத்துகளும் திறந்து விடப்பட்டிருக்கின்றன.

இதனல் பல்லாண்டுகளாகப் பிரிந்து கிடந்த குடும்பங்கள் இப்போது தங்கள் அருமை உறவினர்களுடன் மீண்டும் சேருவதில் எல்லையற்ற மகிழ்ச்சி அடைகிறார்கள். நானும்கூட இவ்வாறு பிரிக்கப்பட்டிருந்தவன்தான் ஆனல் இணைப்புக்கு விரோதமாக ஒரு ஈ, காக்கா கூட இல்லை' —என்றார்.

### கம்யூனிஸ்ட் இயக்க ஒற்றுமை எமது கட்சியின் குறிக்கோள்

மக்களின் புரட்சிக்கட்சி பற்றி குறிப்பிடுகையில, 'எங்களுடைய கட்சி மார்க்சிஸ்ட—லெனினிஸ்ட கட்சியாகும். இதற்கு ஒரு திட்டம் உண்டு. அது வடக்கே, வியட்னும் தொழிலாளர்கட்சிக்கு உள்ள திட்டம் போன்றது தேசவிடுதலை முன்னணிப்படைகளுக்கு இந்தக்கட்சிதான் உந்து சக்தியாகும்.

ஹோசிமின்னின் கனவைநிறைவேற்றுவதே எங்கள் குறிக்கோள். அதாவது சோஷலிஸ்ட முகாம ஒற்றுமையாகஇருக்கவேண்டும் சர்வதேச கம்யூனிஸ்ட்இயக்கமும் ஒற்றுமையாக இருக்க வேண்டும. இதுதான் எங்கள் லட்சியம் இதற்காகப் பாடுபடுவததன சபதம் ஏற்றுளளோம்'—என்றார்.

### அனைவரும் உதவுகிறார்கள்

சோஷலிஸ்ட் முகாமின் அனைத்துப் பகுதிகளும் எங்களுக்கு இன்று கூட மதிப்பிடற்கரிய உதவிகளைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

அது மட்டுமல்ல. இன்னுமிரண்டு புரட்சிகர ஊற்றிலிருந்தும் உதவி கிடைக்கிறது. அதாவது தேசவிடுதலை இயக்கங்கள் புதிதாக விடுதலையடைந்த நாடுகளும், முதலாளிததுவ உலகின் ஜனநாயக இயக்கங்களும சோசலிஸ்ட இயக்கங்களும் எங்களுக்கு உதவுகின்றன.

இந்த உதவிகள் இல்லையேல எங்கள் நிலைமை கடுமையான கஷ்டங்களுக்கு உள்ளாக நேரிட்டிருக்கும். இந்த உதவிகளெலலாம விலைமதிக்க முடியாதவை.

ஆனாலும் ஒன்று தெளிவானது. நாங்கள் எங்களுடைய சொந்தப்பாதையில் எங்களுடைய சரியான, சுயேச்சையான அரசியல வழியில் முன்னேறிக்கொண்டிருக்கும் போதுதான் இத்தகைய உதவிகள் கிடைத்தன' என்றார்.

### ஜனதா முன்னணி சந்திக்கும்

## கல்லூரி ஆசிரியர்கள் போராட்டம்

அகமதாபாத், ஜூன் 23—

குஜராத் மாநிலத்தில புதிதாக பதவியேறியிருக்கும் ஜனதா முன்னணி அரசாங்கம் சந்திக்கும் வேலை நிறுத்தப் போராட்டம் கல்லூரி ஆசிரியர்களின் போராட்டம்.

குஜராத் பல்கலை கழகத்தைச் சார்ந்த 120 கல்லூரிகளின் 3000 ஆசிரியர்களும் காலவரையற்ற வேலை நிறுத்தத்தை ஆரம்பித்துள்ளார்கள்.

தனியார் நிர்வாகத்தில் உள்ள விஞ்ஞானக் கல்லூரி ஒன்றில்11ஆசிரியர்கள்பதவி விலக்கம் செய்யபட்டுள்ளனர். அவர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமெனறே இந்தப் போராட்டம் தொடங்கப்பட்டுள்ளது.

அதிகப்படியான அளவில் உபரிஆசிரியர்களாக உள்ளனர் என்ற காரணத்தைக்காட்டி அக்கல்லூரிநிர்வாகம் அந்த 11 பேரை பதவிவிலக்கம் செய்ததாம். இக்காரணததை பல்கலைகழகம் ஏற்றுக்கொள்ளவில்லையாதலால் அக்கல்லூரிமூடப்பட்டது. குஜராத் பல்கலைக் கழக ஆசிரியர்கள் 3 ஆயிரம பேரும் வேலை நிறுத்தம் செய்வதால் எந்தக்கல்லூரியிலும் வேலைநடைபெற வில்லை.

### அமைச்சர் திணறல்

ஜனதா முன்னணியின் கல்வி அமைச்சர் இப்போராட்டம் பற்றி குறிப்பிடுகையில், இப்போராட்டத்திற்கு சீக்கிரமேமுடிவு காண தீர்மானிக்க முடியவில்லை என்கிறார். ஏனென்றால், கல்லூரி நிர்வாகத்தினர் அப்பதினெரு ஆசிரியர்களை மீண்டும வேலைக்கு எடுத்துக் கொள்ளக்கூடாது என்பதில் உறுதியாக உள்ளனராம், அதே சமயத்தில் கல்லூரி ஆசிரியர் அமைப்பும் அப்பதினெரு ஆசிரியர்களை மிண்டும் வேலைக்குசேர்த்துவிட வேண்டும் எனபதில உறுதியாக உள்ளதாம.

பல்கலைகழகமே, அக்கல்லூரி நிர்வாகத்தின் முடிவு ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல ஆசிரியர்களை வேலை நீக்கம் செய்தது ஏற்றுக் கொள்ளக்கூடியதல்ல என அறிவித்துள்ளது,

இந்த அடிப்படையில் பிரச்சினையை அணுகி 11 ஆசிரியர்களையும் மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ளுமாறு நிர்வாகத்தை வற்புறுத்தாமல் வெறும் அறிவிப்பாளராக இருக்கிறார் ஜனதா முன்னணியின் கல்வி அமைச்சர்.

### பஸ் தொழிலாளர் அடைக்கப்பட்டுள்ள

## பாளைச் சிறையில் குடிநீர்க் கஷ்டம்

### முதலமைச்சருக்கு எம். ஆர். வி. தந்தி

மதுரை, ஜூன். 24—

போக்குவரத்துத் தொழிலாளர்களது வேலைநிறுத்ததில் கைது செய்யப்பட்டு பாளையங்கோட்டை சிறையில் அடைக்கப்பட்டுள்ளவர்களுக்கு குளிக்கவோ, குடிக்கவோ தண்ணீர் வசதி இல்லை. அவர்களுக்கு பழக்கமில்லாத ராகிக் கூழ்தான்காலையில் கொடுக்கப்படுகிறது. மற்றும் பத்திரிகை வசதி முதலியன மறுக்கப்படுகின்றன.

இது சம்பந்தமாக முதலமைச்சர் கருணாநிதிக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட கட்சியின மாநிலக்குழு சார்பில் தோழர் எம ஆர் வெங்கடராமன் இன்று ஒரு தந்தி அனுப்பியுள்ளார்.

சிறையில் இருப்பவர்களுக்கு [illegible] ஏற்பாடு செய்யவும் அவசர நடவடிக்கை எடுக்கும்படி அத் தந்தியில் வற்புறுத்தப்பட்டுள்ளது.

### தென்வியட்னும்-பிரிட்டிஷ் ராஜிய உறவு

லண்டன், ஜூன்.23—

தென்வியட்நாம புரட்சி அரசும் பிரிட்டிஷ் அரசாங்கமும பரஸ்பரம் இருநாடுகளும் ராஜிய உறவுகளை ஏற்படுத்திக கொள்ளத் தீர்மானித்துள்ளன. மேலும் பரஸ்பரம் இருநாட்டு அரசாங்கங்களும் இருநாட்டு தலைநகரில தூதரகம திறக்கவும் தீர்மானிததுள்ளன.

தீக்கதிர்

# ஆசியாவில் அமெரிக்க அபாயம் நீடிக்கிறது

வியட்நாமிலிருந்தும், கம்போடியாவிலிருந்தும் விரட்டி அடிக்கப்பட்ட அமெரிக்க ஏகாதிபத்தியம் தனது தோல்வியை ஏற்றுக் கொண்டுவிட்டது என்று நினைக்க இடமே இல்லை. 'அமெரிக்காவை நம்புகிறவர்களை கைவிடமாட்டோம்' என்றும் 'ராணுவ உடன்படிக்கைகளை நிறைவேற்றுவோம்' என்றும் அமெரிக்கா, பசிபிக்மாகடலில் ஒரு வல்லரசு என்றும் அவர்கள் பல அறிக்கைகள் விடுத்துள்ளார்கள். குறிப்பாக தென்கொரியாவுக்கு அளித்துள்ள வாக்குறுதியை மீண்டும் ஊர்ஜிதம் செய்திருக்கிறார்கள். தென்கொரியாவில் 48000 அமெரிக்க சிப்பாய்களும், ஏராளமான தளவாடங்களும் உள்ளன.

கொரியாவில் சண்டையை துவக்க அமெரிக்கா தனது கைப்பாவையான தென்கொரிய சர்க்காரை இடைவிடாது தூண்டி வருகிறது. வடகொரியா எந்த நிமிடமும் எங்கள் மீது படையெடுக்கலாம் என்று கூசாமல் புளுகுகிறது தென்கொரிய அரசு. வடகொரியாவிலிருந்து தென்கொரியாவுக்குள் பிரவேசிக்க பல சுரங்க வழிகளை வடகொரிய தோண்டி வைத்திருக்கிறதென்ற ஆதாரமற்ற பொய்யையும் விளம்பரப்படுத்தியது. கம்யூனிச எதிர்ப்பில் கண் பார்வையை இழந்துள்ள 'இந்து' பத்திரிகையும் இந்த அவதூறை ஒரு தலையங்கத்தில் நமது நாட்டுமக்களிடையே பரப்பியது. இவ்வளவு ஆத்திரமூட்டல்களுக்குமிடையே வடகொரிய அரசாங்கம் நிதானத்தை இழக்காமல், தென்கொரிய மக்களும் வடகொரிய மக்களும் ஒரே நாட்டவராதலால் சமாதானபூர்வமாகவும் இஷ்டபூர்வமாகவும் அவர்கள் ஒற்றுமை காண்பதே கொரிய மக்களனைவரின் எதிர்காலத்திற்கும் நல்லது என்றுமட்டும் தான் பேசியுள்ளது.

ஆனால் அமெரிக்கர்களுக்கு காலதாமதமின்றி கொரியாவை ஓர் போர்க்களமாக்கவேண்டும். அதனால் இரண்டு நாட்களுக்கு முன்பு அமெரிக்க அரசாங்கத்தின் பாதுகாப்பு இலாகா மந்திரி ஜேம்ஸ்சுலெசிங்கர் "கொரியாவில் நடக்கவிருக்கும்சண்டையில்போருக்கவசியமான அணு ஆயுதங்கள் தடைசெய்யப்படமாட்டாது" என்று திமிருடன் பேசியிருக்கிறான். வடகொரிய அரசு இதற்கு உடனே சுடச்சுடபதில கொடுத்திருக்கிறது. "வடகொரியாமீது அணு குண்டு வீசுவோமென்ற அமெரிக்க மிரட்டலே இது அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளின்போர்வெறி உச்சகட்டத்திற்குச்சென்றுள்ளதையே இது காட்டுகிறது. ஆனால் கொரியாவில் ஒரு யுத்தத்தை அமெரிக்கா துவங்குமானால் கொரிய மக்களிடமிருந்து சரியான பதிலடி கிடைக்கும்' என்று வடகொரிய அறிக்கை எச்சரித்திருக்கிறது.

வியட்நாமில் கிடைத்த உதை அமெரிக்காவை திணறடித்தது உண்மை. இதனால்தான் இதுவரை அமெரிக்காவை நம்பி கம்யூனிச எதிர்ப்பு முன்னணியில் இருந்த பிலிப்பைன்ஸ் அரசும் தாய்லாந்து அரசும், வியட்நாமோடு நட்பை விரும்புவதோடு மக்கள் சீனக்குடியரசுடன் தொடர்புக்கு ஏற்பாடு செய்துள்ளனர் ஆனால் அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு ஆசியாவைச் சுரண்டும் எண்ணங்களை எளிதில் கைவிடமுடியாது. இங்கு ஜனநாயகத்தை பாதுகாக்கவா அவர்கள் வருகிறார்கள்? அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் பொருளாதாரத் தேவைகளுக்கே ஆசியக் கடற்கரையைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டு தானிருக்க வேண்டும்.

நான்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளான இந்தோனேசியா, மலேசியா, பிலிப்பைன்ஸ், தாயலாந்துமட்டும் உலக உற்பத்தியில 95 சதவிகித ரப்பரும், 98சதவிகிதம் தென்னை-தேங்காய்சம்பந்தமானபொருட்களும் 60சதம்தகரமும், 60 சதம் கடினமான மரப்பலகைகளும், 60 சதம் ஏலக்காய் போன்றவையும், 20 சதம் அன்னாசிபழங்களும் உள்ளன வையாயிருக்கின்றன. சர்வதேச அரிசி வியாபாரத்திலும் 60 சதம் இந்த நாடுகள் மூலமதான் நடக்கிறது. இதைத்தவிர எண்ணெய்க்கிணறுகளும் தாமிரச்சுரங்கங்களும் தொடர்ந்துகண்டு பிடிக்கப்பட்டு இயற்கைச்செல்வங்களை இப்பிரதேசத்தில் அதிகப்படுத்தியிருக்கின்றன. இவற்றையெல்லாம் கொள்ளையடிக்க இடைவிடாது திட்டமிடாமல் அமெரிக்க ஏகாதிபத்தியம் எவ்வாறு உயிர்வாழமுடியும்?

அதனால்தான் கிழக்கு ஆசியப்பிரதேசத்தில் இன்னும் 182 000 சிப்பாய்களையும் 850 குண்டுவீசும் விமானங்களையும், 56 போர்க்கப்பல்களையும் அமெரிக்கா இன்னும் வைத்திருக்கிறது.

ஆனால்வியட்நாம்கம்போடியா அனுபவத்திற்கு பிறகு —இந்த படைகளையெல்லாம் பசிபிக மாகடலிலுள்ள பல தீவுகளில் நிறுத்தியிருக்கிறது. குவாம். டினியான், மார்ஷல் தீவுகள் இவற்றில மிக முக்கியமானவை. இவற்றுடன் முடிந்த வரையில, ஜப்பான். தைவான், பிலிப்பைன்ஸ் ஆஸ்திரேலியா, நியூஸிலண்ட் முதலிய நாடுகளையும் பயன்படுத்துவார்கள். இந்துமா கடலில் உள்ள டியோகா கார்சியா வரையிலும் ஆசியா கண்டத்தை வளைத்து நிற்கும் வகையில் படைத் தளங்களை அமைத்துக் கொள்வதே அமெரிக்காவின் புதிய போர் திட்டம். நுட்பமிக்க விஞ்ஞான ரீதியானயுத்த சாதனங்களுடன் அமெரிக்காவின் இந்தபடைத்தளங்கள் ஆசியாவை அச்சுறுத்தி நிற்குமாம்.

புலி பசித்தாலும் புல்லைத்தின்னாது. ஏகாதிபத்தியம் அடித்துக்கொல்லப்படும் வரையில் தனது தன்மையை இழக்காது. இது குறித்து இந்திய மக்களும் இதர ஆசிய மக்களைப்போல் எச்சரிக்கையாயிருத்தல வேண்டும. இந்த அச்சுறுத்தலின் முதல் நடவடிக்கை கொரியாவில் கட்டவிழ்த்துவிடப்பட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை. அமெரிக்க ஏகாதிபத்தியம் இறுதியாக முறியடிக்கப்படும வரையில் ஒவ்வொரு ஆசிய நாட்டின் சுதந்திரத்திற்கும் அபாயம் என்றும் உளது.

## சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி

பழனி. ஜூன். 24—

பழனித் தாலுகா போடுவாரபட்டி கிராமத்தில தோழர் கே சுப்ரமணி தலைமையில் சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி அமைப்பு கூட்டம நடந்தது.

தோழர்கள் பி கே கடவுள் குமாரவேல், வி சுப்ரமணி ஆகியோர் பேசிய பின்பு முன்னணியின் பழனி தாலுகா கனவீனர் பி கே கருப்புசாமி 'சமுதாய மாறுதலில் இளைஞர் பங்கு' என்பது பற்றி விளக்கவுரை ஆற்றினார்.

முன்னணியின் தலைவராக கே சுப்ரமணி, உதவி தலைவராகவி கருப்புசாமி, செயலாளராக கே கடவுள், உதவிச் செயலாளராக வி சுப்ரமணி பொருளாளராக குமாரவேல், ஆகியோரும் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக ஓ சுப்பையன், ஈஸ்வரமூர்த்தி, முத்துச்சாமி நாட்டுத்துரை ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## இந்திய பெரு முதலாளிகள் வக்காலத்து

# நாட்டை ஆள இந்திராவுக்குத்தான் தகுதியாம்

புதுடெல்லி, ஜூன். 22—

இருபத்தியேழு ஆண்டு கால காங்கிரஸ் ஆட்சிகாலத்தில் இந்திய தொழிலாளி வர்க்கத்தையும் மக்களையும் சுரண்டி கொள்ளையடித்து சூறையாடிக் கொழுத்துப்போன பெருமுதலாளிக் கூட்டம் இந்திராகாந்தியை அவருடைய இல்லத்தில் சந்தித்து அவருடைய தலைமையை போற்றிப் புகழ்ந்துள்ளனர். அவரது தலைமையின் மீது தங்களது பூரண நம்பிக்கையை தெரிவித்துள்ளனர்.

### பெருமுதலாளிகளின் நலனுக்காக

இந்திய பெருமுதலாளிகளின் நலனை காப்பதில இந்திய அரசியலில் என்னென்ன தந்திரங்களை கையாள வேண்டுமோ அத்தனை தந்திரங்களையும் — முற்போக்கு வேடங்களையும் அடக்குமுறைத் தந்திரங்களையும்— கையாளுகின்ற தங்களது தலைவி இந்திராகாந்தியின் தலைமை தான் நாட்டிற்கு வழிகாட்ட முடியும் என்ற தங்களது உள்ளக் கிடக்கையையும் வெளியிட்டுள்ளது.

இக்பெரு முதலாளிகளின் கூட்டாமான இந்திய வர்த்தக தொழில் சம்மேளனத்தின் சார்பாகஜூன்21,22 ஆகிய இரு தேதிகளில்— முதல் நாள் சம்மேளன உதவி தலைவர் எம். வி. அருணாசலம் தலைமையிலும், 2 வது நாள் உதவித்தலைவர் கே. கே. பிர்லாவின் தலைமையிலும் பிரதமர் இந்திராகாந்தியை சந்தித்துள்ளனர். மேலும் இந்திய சுரண்டல் கூட்டத்தாரின் ஏனையபிரிவுகளான இந்திய வர்த்தக சம்மேளனத்தாரும் அகில இந்திய தொழில் சம்மேளனத்தாரும ஜூன் 21-ல் பிரதமரைச் சந்தித்து தங்கள் ஆதரவை தெரிவித்துள்ளனர்.

### பணமுதலைகள் சந்தித்தனர்

இந்திய வர்த்தக தொழில் சம்மேளனத்தின் உதவி தலைவர் அருணாசலத்தின தலைமையில் பிரதமர் இந்திரா காந்தியை சந்திக்கச் சென்ற பெருமுதலாளிகள் கூட்டத்தில் அதில் பாபு பாய்சினாய், எல்.பி.ஜெயின் கே.பி. கோயங்கா, ரகுநாத் போதார், கே. என். மோடி இந்தியாவின் 2-வது பெரு முதலாளி கே. கே. பிர்லா ஆகிய தொழில் முதலைகள் இருந்தனர்,

அலஹாபாத் உயர்நீதி மன்றத் தீர்ப்பின் தொடர்ச்சியாக அரசியல் நெருக்கடியை சந்தித்துக்கொண்டிருக்கும் பிரதமர் இந்திரா காந்தியிடம் தங்களது ஆதரவையும், நம்பிக்கையையும் தெரிவித்தனர்.

### இந்திராவுக்கு பெரு முதலாளிகளின் பாராட்டு

இந்திய உழைப்பாளி மக்களை சொல்லொண்ணா வாழ்க்கை நெருக்கடியில் தள்ளிவிட்டு இந்திய பெரு முதலாளிகளை வெள்ளைப் பணமாகவும் கறுப்புப் பணமாகவும் கொள்ளையடித்து கொழுக்க அனுமதித்த இந்திராகாந்தியைப் பாராட்டியும் அவரது தலைமையின் அவசியத்தை வலியுறுத்தியும் எம் வி அருணாசலம் ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார்.

அதில் அவர் தொல்லைமிக்க சர்வதேச நிலையின் போது தேசிய ஒற்றுமையையும் வலிமையையும் இந்தியாவுக்கு இந்திராகாந்தி அளித்தாராம். அதேபோல் ஜனநாயகக் கட்டுக்கோப்புக்குள் தேசிய நலனுக்காக திருமதி இந்திரா காந்தி தனது முதிர்ந்த அறிவை பயன்படுத்தினாராம்.

மேலும் இந்தியா நீண்ட கடுமையான பாதையைக் கடக்க வேண்டியுள்ளது என்பதால் நாட்டின் பொருளாதார, சமூக புனர்நிர்மானத்தில் இந்திராகாந்தி மிக முக்கிய பொறுப்பு வகிக்க உள்ளாராம். எனவே நாட்டிற்கு இந்திராகாந்தி தன்னுடைய வலிமையான தலைமையையும், அறிவையும் பயன் படுத்துவது தொடர வேண்டும் என்றும் அப்பெருமுதலாளிகளின் பிரதிநிதி தனது அறிக்கையில் இந்திராகாந்தியை கேட்டுக் கொண்டுள்ளார்;

### போராடும் மக்களை அடக்கும் இந்திரா

22-ந் தேதியன்று மாலை பிர்லாவின் தலைமையில் சென்ற ஒரு பெருமுதலாளி கோஷ்டி — இந்திரா காந்தி இல்லம் சென்றபோது அவருக்கு ஆதரவு தெரிவித்து பிர்லா பேசினார்.

அவர் பேசுகையில் தாங்கள் இந்திராகாந்தியினுடைய கொள்கையிலும், அரசியல் முறையிலும்முழு நம்பிக்கை கொண்டிருப்பதாக தெரிவித்தார்.

மேலும், "கடந்த வருடங்களாக இந்தியா சந்தித்து வரும் பொருளாதார கஷ்டங்களிலிருந்து நாட்டை இந்திராகாந்தி தான் மீட்க முடியும் என்றும், 'அதற்குக் காரணம், அவருடைய வலிமையான தலைமையே' என்றும் பாராட்டினர்.

இந்திய தொழிலாளி வர்க்கத்தின மீதும்ஏனைய உழைப்பாளிமக்கள் மீதும் வரிமேல் வரி, விலைவாசி உயர்வு, கட்டாய ஊதிய முடக்கம்ஆகிய வற்றைச் சுமத்தியும் அவற்றை எதிர்த்துப் போராடினால் அனைத்து அடக்குமுறைகளைக் கையாண்டு ஒடுக்குகின்ற ஒரு தலைவியை பெருமுதலாளிகள் பாராட்டமாட்டார்களா?

பெருமுதலாளிகளின் பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்துப் பேசுகிறார் திருமதி இந்திரா காந்தி.

அவர் பேச்சின் போது, தனது கட்சின் 'சாதனை'களை அளந்துவிட்டார். விலைவாசி உயர்வை அவரது ஆட்சி கட்டுப்படுத்தியதாம். வேலையில்லாத் திண்டாட்டத்தையும் கட்டுப்படுத்தியதாம். விஞ்ஞானத்திலும், தொழில் நுணுக்கத்திலும் இந்திய செய்துள்ள சாதனைகளின காரணமாக நாட்டின் கௌரவம் சர்வ தேச உலகில் அதிகரித்துள்ளதாம். இதையெல்லாம் தனைக் காணவந்த பெருமுதலாளிகளிடம் ஒப்புவித்தார்.

மேலும், கடந்த5 ஆண்டுகளாக மத்திய அரசை பலவீனமாக்க எதிர்க்கட்சிகள் முயற்சிக்கின்றன என்றும, தன்னைப்பற்றியும் தனது கொள்கையைப் பற்றியும் மக்களிடையே தவறான எண்ணம் உண்டாகவும் எதிர்க்கட்சிகள் பாடுபடுகின்றன என்றும் அவர்களிடம் ஒப்புவித்துள்ளார்.

மேலும், ஏதாவது ஒரு வகையில அவரை பதவியிலிருந்து இறக்கவே எதிர்க்கட்சியினர் முயற்சிக்கின்றனர் என்று ஓலமிட்டுள்ளார்.

இவ்வாறு தங்களது ஆதரவைத் தெரிவிக்க வந்த பெருமுதலாளிகளிடம் தனது நிலைமையை விவரித்தார் திருமதி இந்திராகாந்தி.

### ஏழை மக்களை ஏமாற்றும் சோசலிசம்

அதே நாள்தான் பெருமுதலாளிகளை சந்தித்து அவர்களது பூரண ஆதரவைப் பெற்ற அதே நாள் தான்— தன்னை சந்திக்க வந்த சாதாரண மக்களிடமும் பேசினார்.

ஒரு ஒளிமயமான சமுதாயத்தை அமைக்க சோசலிசக் கொள்கைகளை கையாளப் போவதாக அந்த அப்பாவிமக்களிடம் அளந்துவிட்டார்.

இந்திராகாந்தி கூறும் "சோசலிசக் கொள்கை" என்பது பெருமுதலாளிகளின் நம்பிக்கையைப் பரிபூரணமாகப் பெற்றுள்ளது என்பதிலிருந்து அது எம் மாதிரியான "சோசலிசம்" என்று சொல்லாமலேயே விளங்கும்.

## போக்குவரத்து தொழிலாளர் போராட்டம்

# மார்க்சிஸ்ட், சி.ஐ.டி.யூ., விவசாய சங்கம், வாலிபர் முன்னணிசார்பில் ஆதரவு ஆர்ப்பாட்டம்

மதுரை, ஜூன், 24—

சம்பள உயர்வு, பஞ்சப்படி உயர்வு, மோசடி திட்டமான ஜப்பான் திட்டத்தை கைவிடுதல் ஆகிய கோரிக்கைகளுக்காக கடந்த 15ந் தேதி நள்ளிரவு முதல் போக்குவரத்து தொழிலாளர்கள் நடத்திவரும் வேலை நிறுத்தப் போராட்டத்தை ஆதரித்தும், திமுக அரசின் பழிவாங்கல்- அடக்குமுறை நடவடிக்கைகளை கண்டித்தும் தமிழகம் முழுதும் பல்வேறு உழைக்கும் பகுதியினர் ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள் நடத்தி வருகின்றனர்.

### குமரி மாவட்டத்தில்

குமரி மாவட்டத்தில்மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பல்வேறு இடங்களில் ஆர்ப்பாட்டங்களும் பொதுக்கூட்டங்களும் நடக்கின்றன.

21ந்தேதி களியல், இடைக்கோடு பொன்மனை ஆகிய இடங்களில் ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள் நடந்தன.

டரசேரியில் விவசாயிகள் சங்கம் சார்பில் ஊர்வலமும் ஆர்ப்பாட்டமும் நடத்தப்பட்டன.

மணவாளக்குறிச்சியில், இந்தியன் ரேயர்எர்தஸ் ஊழியா சங்கம் சார்பில் ஆதரவு ஊர்வலம நடந்தது சிஐடியூ ஐஎன்டியூசியைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான ஊழியர்கள் கலந்துகொண்ட இந்த ஊர்வலம அம்மாண்டி விளையில் முடிந்தது அங்கு நடந்த கூட்டத்தில், மார்க்சிஸ்ட் கட்சியின் மாவட்டச் செயலாளா பி திவாகரனும் ஐ என் டி யூ சி சார்பில் ஜஸ்டினும் பேசினர்.

போராட்டத்தை ஆதரித்து ஜூன்27ந் தேதி களியலிலும், 28ந் தேதியன்று குலசேகரத்திலும், 30ந் தேதியன்று தடிக்காரன் கோணத்திலும். ஜூலை 1ந் தேதி மணககாவிளையிலும பொதுக்கூட்டங்கள் நடக்கின்றன.

### மின் தொழிலாளர்கள்

குமரிமாவட்டத்தில் உள்ள மின்திட்ட அலுவலகங்கள் முனபு மினசாரத் தொழிலாளர்கள கடந்த 20ந் தேதியன்று காலையிலும் மாலையிலும ஆதரவு ஆர்ப்பாட்டங்கள் நடத்தினர்.

### கருணாநிதிக்கு தந்தி

நெல்லை மாவட்டம் உடன்குடி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் முதலமைச்சர்கருணாநிதிக்கு தந்தி அடிக்கப்பட்டுள்ளது.

அதில் போக்குவரத்துத் தொழிலாளர்களது கோரிக்கைகளை ஏற்கக் கோரியும் கைது செய்யப்பட்ட அனைவரையும் விடுலை செய்யக் கோரியும் வற்புறுத்தப்பட்டுள்ளது.

### சோழவந்தானில்

பஸ் தொழிலாளர் போராட்டத்தை ஆதரித்து சோழவந்தான் பஸ் நிலையம் அருகில் மார்க்சிஸ்ட் கட்சி சார்பில் கே. சேதுராமன் தலைமையில் பொதுக்கூட்டம நடந்தது. வட்டச் செயலாளர் எஸ் ராமு பேசினார். தியாகி மணவாளன் குழு இன்னிசை நடந்தது.

### தஞ்சாவூர்

தஞ்சை மாவட்ட மோட்டார் தொழிலாளர் சங்க இணைச்செயலாளர் எஸ். கிருஷ்ணமூர்த்தி விடுத்துள்ள அறிக்கையில், சர்வ கட்சி தொழிற்சங்கத் தலைவர்களின் வேண்டுகோளுக்கு மதிப்பளித்து, போராட்டக்குழு தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தி சுமூக முடிவுகாண முன்வரவேண்டும் என்று முதலமைச்சரை வற்புறுத்தியுள்ளார்.

### சென்னை

பஸ்தொழிலாளா போராட்டத்தை ஆதரித்து, சைதாப்பேட்டை தேரடியில் 22-ந் தேதி அ. இராமசாமி தலைமையில் நடந்தபொதுக்கூட்டத்தில் மார்க்சிஸ்டகம்யூனிஸ்ட்கட்சி மாநிலச் செயலாளர் ஏ. பாலசுப்ரமணியம்: டி. கணேசன், வை. கிருஷ்ணசாமி மற்றும் பலர் பேசினர்.

நாயக்கன் பாளையத்தில் பொதுக்கூட்டமும் நடந்தன. வாலிபர் முன்னணியின் செயலாளர் கே சி கருணாகரன் துணைச் செயலாளர் என் வி தாமோதரன், பெருமாள், ஆர் பாலகிருஷ்ணன். ஜி பி நாராயணசாமி ஆகியோர் பேசினர்.

## பீடித் தொழிலாளர் கூலி உயர்வு கோரிக்கை

திருநெல்வேலி, ஜூன்.23—

நெல்லை மாவட்டம் குருபன் பேட்டையில் பீடித் தொழிலாளர்கள் கூலி உயர்வும், ரேஷன் அரிசியின் அளவை உயர்த்தக் கோரியும் வருகின்றனர்.

இக் கோரிக்கைகளை வற்புறுத்தி அண்மையில் நடந்த பொதுக்கூட்டத்துக்கு தோழர் சண்முகம் தலைமை வகித்தார்

மாவட்ட மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் சு. பாலவிநாயகம், பீடித் தொழிலாளர் சங்கச் செயலாளர் ம. ராஜாங்கம், மின்சாரத் தொழிலாளர் சங்கச் செயலாளர் பி தியாகராசன் ஆகியோர் பேசினர்.

## பங்களா தேஷுக்கு இந்தியாவின் கடன்

பம்பாய், ஜூன். 23—

விவசாயத்துறை இயந்திரங்கள் இறக்குமதி செய்வதற்காக பங்களாதேஷ், இந்தியாவிடமிருந்து ஒரு கோடி ரூபாய் கடன பெறவிருக்கிறது அதற்கான ஒப்பந்தம் இருநாடுகளுக்குமிடையே ஏற்பட்டுள்ளது.

இந்த ஒரு கோடி ரூபாய் ஒப்பந்தம் 6 நாட்களாக பேச்சு வார்த்தை நடத்தி கடந்த சனிக்கிழமை ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

## ஒருமித்த கருத்து இல்லை உறுமலும் பொருமலும் உண்டு

இந்திராகாந்தியே தொடர்ந்து பிரதமமந்திரியாக இருக்க வேண்டும் என்ற கருத்து காங்கிரஸ் கட்சிக்குள் ஒருமித்த கருத்தாக இல்லை. இளம் துருக்கராகிய மோகன்தாரியா ஒருவர் மட்டும்தான் பகிரங்கமாக வந்து 'இந்திராகாந்தி பதவி விலகுவதே மரியாதை' என்று அறிக்கை விட்டார், அந்த அளவுக்கு பகிரங்கமாக வெளியே வர விரும்பாதவர்கள் தங்கள் அதிருப்தியை வேறு வழிகளில் காட்டிக் கொள்ளுகிறார்கள்.

அதாவது, திருமதி காந்தி ராஜினாமா செய்வதுதான் ஒழுக்கமான நடைமுறையாகும்' என்று கூறுகிறார்கள்.

### பச்சையாக சொல்லி விட்டார் மோகன் தாரியா

காங்கிரஸ் தலைவர் டி கே பருவா கூட்டிய காங்கிரஸ் எம் பி களின் பூர்வாங்கக் கூட்டத்துக்கு சென்று கலந்து கொண்ட சிலர், 'அங்க இந்திராதான் இந்தியா' 'இந்தியாதான் இந்திரா! இந்திராவுக்கு ஒன்று என்றால் — அது இந்தியாவுக்கு என்று அருத்தம் இந்திரா இல்லாவிட்டால், அரசு நடக்காது, காங்கிரஸ் கட்சி உடைந்து விடும்' — என்றெல்லாம் வெளியிடப்பட்ட அறிக்கையில் கையெழுத்துப் போடவில்லை.

பிரதமராக தொடர்ந்து இருப்பதற்கு இந்திரா காந்தி என்னென்ன தார்மீக உரிமைகள் கொண்டாட முடியுமோ அத்தனையும் செய்து வருகிறார்,

இதுகுறித்து மோகன்தாரியா விடுத்த அறிக்கையில், 'இந்திராகாந்திஒருவரைவிட்டால், இந்தியநாட்டைப் பாதுகாக்க, எந்தவொரு நாதியுமில்லை என்று கூறுவதானது, தகுதியுள்ளதலைவர்களான ஜகஜீவன்ராம், சவான் சுவரண்சிங்போன்ற பலரையும் அவமதிப்பதும், தாழ்த்துவதுமாகும்' என்று குறிப்பிட்டுள்ளார்.

மோகன்தாரியா ஒளிவு மறைவு இல்லாமல் நறுக்கென பச்சையாகச்சொல்லிவிட்டார்.

### வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுகிறார் ஜெகஜீவன்ராம்

ஜகஜீவன்ராம், காங்கிரஸ் எம். பி. கள் கூட்டத்தில் பேசும்போது, வாழைப்பழத்தில் ஊசியைச்சொருகினது போல வார்த்தைகளை நாசூக்காகச் சொன்னார்.

எப்படியென்றால், "பிரதம மந்திரி பதவியில் திருமதி காந்தி இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அவர் நமமுடைய தலைவராகவேதான் இருப்பார்... அலகாபாத தீர்ப்பானது நாட்டை நெருக்கடிக்குள் தள்ளினாலும் கூட, நாம் அத்தீர்ப்பை மதிப்போம்"- என்று கூறியதாக 13—6—75 தேதிய 'இந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை செய்தி வெளியிட்டுள்ளது.

தீர்ப்பை மதிப்போம் என்றால் அருத்தம்என்ன? இந்திரா காந்தி பிரதமராக நீடிகக கூடாது என்பது தானே!

தீர்ப்பை பதிம்போம் என்று கூறியதுடன் நிற்கவில்லை, இந்திரா பதவி விலகவேண்டுமென்ற கருத்துடைய' இளம் துருக்கியர்களில் ஒருவரான கிருஷ்ண காந்த் என்பவரையும் சந்தித்தும் பேசியிருக்கிறார்'— என்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகை கூறுகிறது.

### இதெல்லாம் காட்டுவது என்ன?

இன்னொரு முக்கிய விஷயம்.

காங்கிரஸ் முதலமைச்சர்கள் அனைவருமே இந்திரா காந்தி மீது நம்பிக்கை தெரிவித்திருப்பதாக கூறப்பட்டு வந்தது, ஆனால், எக்கனமிக் டைம்ஸ்' என்ற பத்திரிகையில வெளிவந்த செய்தியொன்றில்;

'தலைமைப் பதவிக்கு வர, கட்சிக்குள் எதாவதொரு கோஷ்டி தலைதூக்கினாலும் சரி அல்லது கட்சியிலுள்ள ஒருவர், என்ன ஆனாலும் சரி தலைமையைக் கைப்பற்றியே தீருவேன் என்று தன்னையே பணயம் வைத்து போட்டியிட்டாலும் சரி—கட்சிக்குள் ஒரு கஷ்டமானநிலைமை தோன்றியே தீரும்' என்று ஒரு முதலமைச்சர் கூறினாரென்று 'எக்கானமிக் டைம்ஸ்' பத்திரிகை கூறுகிறது,

இவையெல்லாம் காட்டுவது என்ன?

இந்திரா காந்தி மீது ஏகோபித்த நம்பிக்கை காங்கிரஸ் கட்சிக்குள் இருப்பதையா காண்பிக்கிறது?

## மதுரையில் 450 நெசவாளர் வேலை நிறுத்தம்

மதுரை, ஜூன். 25—

செல்லூரிலுள்ள டி. மாரிமுத்து கம்பெனியில் பணிபுரியும் 40கைநெசவுத்தொழிலாளர்களும கடந்த19ந்தேதி முதல்வேலைநிறுத்தம்செய்து வருகிறார்கள்.

இத் தொழிலாளர்களில் பலருக்கு'புதிய டிசைன்' என்ற பெயரில் கூலிக் குறைப்பை மாஸ்டர் வீவர் அமுல் நடத்தும் அக்கிரமத்தை எதிர்த்தும், புதிய டிசைனுக்குகொடுக்கவேண்டிய கூலியை கொடுக்கக் கோரியும இந்த வேலை நிறுத்தம் நடக்கிறது.

இந்தப் போராட்டத்துக்கு சிஐடியூ, அதிமுக திமுக, ஸ்தாபனக்காங்கிரஸ் ஆகிய தொழிற்சங்கங்கள் ஆதரவு அளித்துள்ளன.

கோரிக்கைகள் குறித்து பலமுறை முயற்சித்தும், ஆர்ப்பாட்டங்கள் நடத்தியும் பேசுவதற்கு நிர்வாகம் மறுத்து விட்டதாக மேற்கண்ட தொழிற்சங்கத் தலைவர்கள் கூறினர்கள்.

## இரானுக்கு இந்தியாவிலிருந்து இரும்புத்தாது ஏற்றுமதி

புதுடில்லி, ஜூன். 23—

இந்தியாவிலிருந்து இரானுக்கு 15 கோடி டன் இரும்புத்தாது ஏற்றுமதி செய்யப்பட இருநாடுகளுக்கு ஒப்பந்தமாகியுள்ளது. மேலும் வருடத்திற்கு 75லட்சம் டன் இருமபுத் தாது வீதம் 20 வருடங்களுக்குள் வாங்கிக் கொள்ளப்பட வேண்டும் எனவும் அவ்வொப்பந்தம் கூறுகிறது.

கர்நாடகாவிலுள்ள குட்ரெமுக் இரும்புத் தாது திட்டத்திலிருந்து அனுப்புவதற்கான பேச்சுவார்த்தை இருநாட்டு அதிகாரிகளுக்குமிடையே இன்று நடைபெற்றது.

பதிலாக, இரான் 63 கோடி டாலர் (504 கோடி ரூபாய்] கடன் இந்...